உ

ஹர ஹர சங்கர ஜெய ஜெய சங்கர

# மஹா பெரியவாள் அஷ்டோத்ரம்



# ஸ்வஸ்திவாசனம் - குருவந்தனம்

ஸ்ரீ குருப்ப்யோ நம:

ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்த்ரமௌளீஸ்வராய நம
ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத் குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சரணயோ: ப்ரணாமா:

ஸ்வஸ்தி ஸ்ரீமதகில பூமண்டலாலங்கார - த்ரயஸ்த்ரிம் சத்கோடி தேவதா ஸேவித - ஸ்ரீ காமாக்ஷீ தேவீ ஸநாத - - ஸ்ரீமதே காம்ரநாத - ஸ்ரீ மஹாதேவீ ஸநாத - ஸ்ரீ ஹஸ்தி கிரிநாத - ஸாக்ஷாத்கார பரமாதிஷ்ட்டான - ஸத்யவ்ரத நாமாங்கித - காஞ்சீ திவ்ய க்ஷேத்ரே - சாரதாமடஸுஸ்த்திதாநாம் அதுலித- ஸுதாரஸ- மாதுர்ய கமலாஸன காமினீ தம்மில்லஸம்ப்புல்ல - மல்லிகாமாலிகா நிஷ்யந்த மகரந்தஜ்ஜரீ - ஸௌவஸ்திக வாங்நிகும்ப்ப - விஜ்ரும்ப்பணாநந்த - துந்திலித மனீஷி

மண்டலானாம் - அனவரதாத்வைத - வித்யாவினோத ரஸிகாணாம் நிரந்தராலங்க்ருதீக்ருத சாந்தி தாந்தி பூம்னாம் ஸகல புவனசக்ர ப்ரதிஷ்ட்டாபக ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்ட்டா விக்க்யாத யசோலங்க்ருதானாம் நிகில பாஷண்டஷண்ட கண்டகோத்க்காடநேந விசதீக்ருத வேத வேதாந்த மார்க ஷண்மத ப்ரதிஷ்ட்டாபகாசார்யாணாம் - ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய வர்ய ஸ்ரீ ஜகத் குரு ஸ்ரீமச்சங்கர பகவத் பாதாசார்யாணாம் அதிஷ்ட்டானே ஸிம்ஹாஸனாபிஷிக்த ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸம்யமீந்த்ராணாம் அந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாநாம் ததந்தேவாஸிவர்ய ஸ்ரீமத் சங்கர விஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாநாம் ச சரணநளினயோ: ஸப்ரச்ரயம் ஸாஞ்ஜலிபந்த்தம் ச நமஸ்குர்ம: ।

॥ ஶ்ரீ: ॥

# தோடகாஷ்டகம்

விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே மஹிதோபநிஷத் கதிதார்த்த நிதே ।
ஹ்ருதயே கலயே விமலம் சரணம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 1

கருணா வருணாலய பாலய மாம் பவ ஸாகரதுஃக்கவிதூனஹ்ருதம் ।
ரசயாகில தர்சந தத்வ விதம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 2

பவதா ஜநதா ஸுஹிதா பவிதா நிஜபோத விசாரண சாரு மதே ।
கலயேச்வர ஜீவ விவேக விதம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 3

பவ ஏவ பவாநிதி மே நிதராம் ஸமஜாயத சேதஸி கௌதுகிதா ।
மம வாரய மோஹமஹா ஜலதிம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 4

ஸுக்ருதே-திக்ருதே பஹுதா பவதோ பவிதா ஸமதர்சன லாலஸதா ।
அதிதீன மிமம் பரிபாலய மாம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 5

ஜகதீம் அவிதும் கலிதாக்ருதயோ விசரந்தி மஹாமஹஸச் ச்சலதஃ ।
அஹிமாம்சுரிவாத்ர விபாஸி குரோ பவ சங்கர தேசிக மே சரணம் ॥6

குரு புங்கவ புங்கவ கேதன தே ஸமதாமயதாம் நஹி கோ-பி ஸுதீஃ ।
சரணாகத வத்ஸல தத்வநிதே பவ சங்கர தேசிக மே சரணம் ॥ 7

விதிதா ந மயா விசதைக கலா ந ச கிஞ்சந காஞ்சநமஸ்தி குரோ ।
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம் பவ சங்கர தேசிக மே சரணம் ॥

॥ தோடகாஷ்டகம் ஸம்பூர்ணம் ॥

**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ராஸ்மதாசார்யாய நமோ நம:**

எங்களுடைய ஆசார்யாளாகிய ஸ்ரீ சந்த்ரஸேகரேந்த்ரருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீ சந்த்ரமௌலி பாதாப்ஜமதுபாய நமோ நம:**

ஸ்ரீ சந்த்ரமௌளீசனுடைய பாதகமலங்களின் மீது வட்டமிடும் வண்டைப்போன்றவருக்கு நமஸ்காரம்

**ஆசார்யபாதாதிஷ்டாநாபிஷிக்தாய நமோ நம**

ஶங்கராசார்ய-பாத-பீடம் என்னும் அதிஷ்டானத்தில் அபிஷேகம் செய்யப்பட்டவருக்கு நமஸ்காரம்

**ஸர்வஜ்ஞாசார்ய பகவத்ஸ்வரூபாய நமோ நம:**

ஸர்வஜ்ஞ ஆசார்ய பகவானின் ஸ்வரூபமானவருக்கு நமஸ்காரம்

**அஷ்டாங்கயோகிஸந்நிஷ்டாகரிஷ்டாய நமோ நம:**

அஷ்டாங்க-யோக-நிஷ்டையில் திறமைப் பெற்றவருக்கு நமஸ்காரம்

**ஸநகாதிமஹாயோகி ஸத்ருசாய நமோ நம:**

ஸனகர் முதலிய மஹாயோகிகளுக்கு ஸமானமானவருக்கு நமஸ்காரம்

**மஹாதேவேந்த்ராஹஸ்தாப்ஜ ஸஞ்ஜாதாய நமோ நம:**

ஸ்ரீ மஹாதேவேந்த்ர ஸரஸ்வதி ஶங்கராசார்யாளின் ஹஸ்த-கமலங்களில் தோன்றியவருக்கு நமஸ்காரம்

**மஹாயோகிவிநிர்பேத்ய மஹத்த்வாய நமோ நம:**

மஹா யோகிகளால் குடைந்து தேடப்படும் பெருந் தன்மையுள்ளவருக்கு நமஸ்காரம்

**காமகோடி மஹாபீடாதீச்வராய நமோ நம:**

காமகோடி மஹாபீடத்திற்கு அதிபதியானவருக்கு நமஸ்காரம்

**கலிதோஷநிவ்ருத்த்யேககாரணாய நமோ நம: 10**

கலிகாலத்தின் தோஷங்களை நிவ்ருத்தி பண்ணிக் கொள்வதற்கு ஒரே காரணமானவருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீ சங்கரபாதாம்போஜசிந்தநாய நமோ நம:**

ஸ்ரீ ஶங்கரருடைய பாத கமலத்தின் மீது சிந்தனை கொண்டவருக்கு நமஸ்காரம்

**பாரதீக்ருதஜிஹ்வாக்ரநர்தநாய நமோ நம:**

ஸரஸ்வதீயே நடனம்புரிகிற நாக்குடையவருக்கு நமஸ்காரம்

**கருணாரஸகல்லோல கடாக்ஷாய நமோ நம:**

கருணாரஸபெருக்கு வெள்ளமாகிய கடாக்ஷம் கொண்வருக்கு நமஸ்காரம்

**காந்திநிர்ஜித ஸூர்யேந்து கம்ராபாய நமோ நம:**

சூரியனையும் சந்திரனையும் தன் காந்தியால் வெல்லக்கூடிய அழகிய தேஜஸுடையவருக்கு நமஸ்காரம்

**அமந்தாநந்தக்ருந்மந்தகமநாய நமோ நம:**

மெல்லிய நடையால் அளவில்லா ஆனந்தம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**அத்வைதாநந்தப்ரிதசித்ரூபாய நமோ நம:**

அத்வைத ஆனந்தத்தால் நிரம்பிய சித்ரூபிக்கு நமஸ்காரம்

**கடீதடலஸச்சாருகாஷாயாய நமோ நம:**

இடையில் விளங்கும் அழகிய காஷாய வஸ்த்ரம் கொண்டவருக்கு நமஸ்காரம்

**கடாக்ஷமாத்ரமோக்ஷேச்சா ஜநகாய நமோ நம:**

வெறும் கடாக்ஷத்தாலேயே ஜனங்களுக்கு மோக்ஷத்தில் இச்சையை உண்டாக்கக் கூடியவருக்கு நமஸ்காரம்

பாஹு‌தண்டலஸத்வேணுதண்டகாய நமோ நம:

கையில் (சன்யாஸிகளுக்குரிய) மூங்கில் தண்டத்துடன் விளங்குபவருக்கு நமஸ்காரம்

பாலபாகலஸத்பூதி புண்ட்ரகாய நமோ நம: 20

விபூதிபட்டையுடன் விளங்கும் நெற்றியுடையவருக்கு நமஸ்காரம்

தரஹாஸஸ்புரத்திவ்யமுகாப்ஜாய நமோ நம:

ஒரு சிறு புன்னகைபூத்த முக கமலமுடையவருக்கு நமஸ்காரம்

ஸு‌தாமதுரிமாமஞ்ஜு‌பாஷணாய நமோ நம:

அமிருதம் போன்ற மதுரமான இனிய வாக்குடையவருக்கு நமஸ்காரம்

தபநீய திரஸ்காரி சரீராய நமோ நம:

தங்கத்தை மங்கவைக்கும் சரீர காந்தியுடையவருக்கு நமஸ்காரம்

தப: ப்ரபாவிராஜத் ஸந்நேத்ரகாய நமோ நம:

தபோபலத்தின் ப்ரபாவத்தால் எப்பொழுதும் ப்ரகாசிக்கும் அழகிய நயனமுடையவருக்கு நமஸ்காரம்

**ஸங்கீதாநந்தஸந்தோஹ ஸர்வஸ்வாய நமோ நம:**
ஸங்கீதத்தின் ஆனந்த பெருக்கென்னும் பெரும் தனம் உடையவருக்கு நமஸ்காரம்

**ஸம்ஸாராம்புதி நிர்மக்நதாரகாய நமோ நம:**
ஸம்ஸார கடலில் விழுந்து தவிப்பவர்களை அதிலிருந்து கடத்திவிடுபவருக்கு நமஸ்காரம்

**மஸ்தகோல்லாஸி ருத்ராக்ஷமகுடாய நமோ நம:**
தம் சிரத்தின் மீது விளங்கும் ருத்ராக்ஷகிரீடமுடைய வருக்கு நமஸ்காரம்

**ஸாக்ஷாத்பரசிவாமோக தர்சநாய நமோ நம:**
வீணாகாத பரசிவ தர்ஶனத்தை கண்ணெதிரேயே கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**சக்ஷுர்கதமஹாதேஜோऽத்யுஜ்ஜ்வலாய நமோ நம:**
நம் கண்ணெதிரேயே அதி உஜ்ஜ்வலமான மஹா தேஜஸாக விளங்குபவருக்கு நமஸ்காரம்

**ஸாக்ஷாத்க்ருத ஜகந்மாத்ரு ஸ்வரூபாய நமோ நம:** 30
ஜகந்மாத்ருஸ்வரூபத்தை நேரில் கண்டவருக்கு நமஸ்காரம்

க்வசித்பாலஜநாத்யந்த ஸுலபாய நமோ நம:

சிலசமயம் சிறுவர்களுக்குகூட ஸுலபமாக புரியக் கூடியவருக்கு நமஸ்காரம்

க்வசிந்மஹாஜநாதீவ துஷ்ப்ராபாய நமோ நம:

சிலசமயம் பெரியவர்களுக்கும் . கூட ஸுலபமாக புரிய முடியாதவருக்கு நமஸ்காரம்

கோப்ராஹ்மணஹிதாஸக்தமாநஸாய் நமோ நம:

பசுக்கள் ப்ரஹ்மநிஷ்டர்கள் இவர்களின் நலனில் ஈடுபடுபவருக்கு நமஸ்காரம்

குருமண்டலஸம்பாவ்யவிதேஹாய நமோ நம:

பெரியோர்களால் பாராட்டப்பட்ட துறவிக்கு நமஸ்காரம்

பாவநாமாத்ர ஸந்துஷ்ட ஹ்ருதயாய நமோ நம:

தன் ஆத்மநிலை உணர்ந்த மாத்திரமே ஸந்தோஷமடை பவருக்கு நமஸ்காரம்

பவ்யாதிபவ்யதிவ்ய ஸ்ரீ பதாப்ஜாய நமோ நம:

மிக மிக மங்களமான திவ்யமான ஸ்ரீபாத கமலங்களுடைய வருக்கு நமஸ்காரம்

**வ்யக்தாவ்யக்ததராநேக சித்கலாய நமோ நம:**

ஸ்பஷ்டமானதையும் அஸ்பஷ்டமானதையும் காட்டும் பேருணர்வு உடையவருக்கு நமஸ்காரம்

**ரக்தசுக்ல ப்ரபாமிச்ரபாதுகாய நமோ நம:**

சிவப்பு வர்ணமும் சுத்த வெள்ளை வர்ணமும் கூடி சோபிக்கும் பாதங்கள் உடையவருக்கு நமஸ்காரம்

**பக்தமாநஸ ராஜீவ பவநாய நமோ நம:**

பக்தர்களின் மனக்கமலங்களை இருப்பிடமாகக் கொண்டவருக்கு நமஸ்காரம்.

**பக்தலோசநராஜீவ பாஸ்கராய நமோ நம: 40**

பக்தர்களின் கண்களாகிய தாமரை மீது பிரகாசிக்கும் சூரியனாக விளங்குபவருக்கு நமஸ்காரம்

**பக்தகாமலதாகல்பபாதபாய நமோ நம:**

பக்தர்களின் ஆசைகளை நிறைவேற்றுவதற்கு கல்பவிருக்ஷமாக இருப்பவருக்கு நமஸ்காரம்

**புக்திமுக்திப்ரதாநேக சக்திதாய நமோ நம:**

போகமும் மோக்ஷமும் கொடுக்கின்ற அநேக சக்தி தருபவருக்கு நமஸ்காரம்.

சரணாகததீநார்தரக்ஷகாய நமோ நம:

சரணம் புகுந்த தீனர்களையும் துயரத்துடன் தவிப்பவர்களையுக் ரக்ஷிப்பவருக்கு நமஸ்காரம்

சமாதிஷட்கஸம்பத்ப்ரதாயகாய நமோ நம:

சமம் தமம் முதலிய ஆறு ஸம்பத்துகளை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

ஸர்வதா ஸர்வதா லோக ஸௌக்யதாய நமோ நம:

எல்லாவிதத்திலும் எப்பொழுதும் எல்லா ஜனங்களுக்கும் ஸௌக்கியம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

ஸதா நவநவாகாங்க்ஷ்ய தர்சநாய நமோ நம:

எப்பொழுதும் புது புது விதமான கண்கொட்டாமல் பார்க்கத்தகுந்த தர்ஸனம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

ஸர்வஹ்ருத்பத்ம ஸஞ்சாரநிபுணாய நமோ நம:

எல்லா பக்தர்களுடைய ஹிருதயகமலங்களில் ஸஞ்சாரம் பண்ணுவதில் நிபுணரானவருக்கு நமஸ்காரம்

ஸர்வேங்கிதபரிஜ்ஞாநஸமர்த்தாய நமோ நம:

எல்லா பக்தர்களுடைய இங்கிதங்களை அறிவதில் தேர்ந்தவருக்கு நமஸ்காரம்

**ஸ்வப்நதர்சநபக்தேஷ்ட ஸித்திதாய நமோ நம:**

பக்தர்களின் ஸ்வப்னத்தில் வந்து அவர்களுடைய இஷ்டங்களை பூர்த்திபண்ணுபவருக்கு நமஸ்காரம்

**ஸர்வவஸ்து விபாவ்யாத்மஸத்ரூபாய நமோ நம:** 50

எல்லா வஸ்துக்களிலும் ஆத்மஸ்வரூபத்தை காண்பவருக்கு நமஸ்காரம்

**தீநபக்தாவநைகாந்த தீக்ஷிதாய நமோ நம:**

தீன பக்த கூட்டங்களை காப்பதையே வ்ரதமாக எடுத்துக்கொண்டவருக்கு நமஸ்காரம்

**ஜ்ஞாநயோகபலைச்வர்யமாநிதாய நமோ நம:**

ஞானம் யோகபலம் முதலிய பெருமைகளால் போற்றப்பட்டவருக்கு நமஸ்காரம்

**பாவமாதுர்ய கலிதாபயதாய நமோ நம:**

மதுரமான ஸ்வபாவத்தால் அபயம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**ஸர்வபூதகணாமேய ஸௌஹார்தாய நமோ நம:**

எல்லா பூதகணங்களிடம் அளவில்லாத ஸ்நேஹத்தைக் காட்டுபவருக்கு நமஸ்காரம்

மூகீபூதாநேக லோகவாக்ப்ரதாய நமோ நம:

எல்லா ஊமைகளுக்கும் பேச்சாற்றல் தருபவருக்கு நமஸ்காரம்

சீதலீக்ருத ஹ்ருத்தாபஸேவகாய நமோ நம:

தனக்குப் பணிவிடை புரிபவரது மனத்தில் உள்ள தாபத்தை அணைப்பவருக்கு நமஸ்காரம்.

போகமோக்ஷ ப்ரதாநேக யோகஜ்ஞாய நமோ நம:

ஜனங்களுக்கு போகமும் மோக்ஷமும் கொடுப்பதில் அநேக வழி அறிந்தவருக்கு நமஸ்காரம்

சீக்ரஸித்திகராநேகசிக்ஷஜ்ஞாய நமோ நம:

சீக்ரமாக ஸித்தி தருகிற அநேக வழிகளை கற்பிப்பவருக்கு நமஸ்காரம்

அமாநித்வாதிமுக்க்யார்த்தஸித்திதாய நமோ நம:

அமானித்வம் (கர்வமின்மை) முதலிய முக்ய அர்த்தஸித்திகளை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

அகண்டைகரஸாநந்த ப்ரபோதாய நமோ நம: 60

அண்டிக்க முடியாத ஆனந்த ரஸத்தை ஜனங்களின் மனதில் எழுப்பி கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**நித்யாநித்ய விவேகப்ரதாயகாய நமோ நம:**

நித்யமானவைகளைப்பற்றியும் அநித்யமானவைகளைப் பற்றியும் விவேகத்தை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**ப்ரத்யேககரஸாகண்ட சித்ஸுகாய நமோ நம:**

ஒவ்வொருவரிடத்திலும் உள்நோக்கால் பெறுகிற ஒரேவிதமான துண்டிக்க முடியாத பேர் அறிவாகவும் ஆனந்தமாகவும் இருப்பவருக்கு நமஸ்காரம்

**இஹாமுத்ரார்த்த வைராக்ய ஸித்திதாய நமோ நம:**

இஹத்திலும் பரத்திலும் பொருள் ஆசை அற்ற வைராக்ய ஸித்தி கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**மஹாமோஹ நிவ்ருத்த்யர்த்தமந்த்ரதாய நமோ நம:**

பெரும் மோஹத்திலிருந்து நிவிருத்தி அடைய மஹாமந்த்ரம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ப்ரத்யேக த்ருஷ்டிதாய நமோ நம:**

ஸ்தூலத்தையும் ஸூக்ஷ்மத்தையும் பற்றி அறிய தனிப்பார்வை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**க்ஷயவ்ருத்திவிஹீநாத்ம ஸௌக்யதாய நமோ நம:**

குறைவும் வளர்ச்சியும் இல்லாத ஆத்மஸுகத்தை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

தூலா ஜ்ஞாந விஹீநாத்மத்ருப்திதாய நமோ நம:

தூசான அஞ்ஞானம் அற்ற ஆத்மதிருப்தியை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

மூலாஜ்ஞாநா பாதிதாத்மமுக்திதாய நமோ நம:

ஆதிகாரணமான அஞ்ஞானத்தால் பாதிக்கப்பட்ட ஆத்மாவுக்கு விடுதலை தருபவருக்கு நமஸ்காரம்

ப்ராந்திமேகோச்சாடநப்ரபஞ்ஜநாய நமோ நம:

ப்ராந்தி என்னும் மேகத்தை கலைக்கிற புயல் காற்றுப் போன்றவருக்கு நமஸ்காரம்

சாந்திவ்ருஷ்டிப்ரதாமோகஜலதாய நமோ நம: 70

சாந்தி மழை பொழியும் குறி தப்பாத மேகமாக இருப்பவருக்கு நமஸ்காரம்

ஏககாலக்ருதாநேகதர்சநாய நமோ நம:

ஒரே சமயத்தில் பக்தர்களுக்கு பலவித தர்சனம் கொடுப்பவருக்கு நமஸ்காரம்

ஏகாந்தபக்தஸம்வேத்ய ஸ்வகதாய நமோ நம:

ஏகாந்த பக்தர்களுக்கு மட்டும் அறியத்தக்க உள்ளம் உள்ளவருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீசக்ரரதநிர்மாண ஸம்ப்ரதாய நமோ நம:**

ஸ்ரீசக்ரரதநிர்மாணத்தால் புகழ்பெற்றவருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீ கல்யாணகராமேய ஸம்ச்லோகாய நமோ நம:**

செல்வமும் மங்களமும் தரக்கூடிய எல்லை அற்ற புகழ் உடையவருக்கு நமஸ்காரம்

**ஆச்ரிதாச்ரயணீயத்வ ப்ராபகாய நமோ நம:**

அடைக்கலம் புகுந்தவர்களை அடையவேண்டிய இடத்திற்கு அடைவிப்பவருக்கு நமஸ்காரம்

**அகிலாண்டேச்வரீகர்ணபூஷகாய நமோ நம:**

அகிலாண்டேச்வரீயின் காதுகளுக்கு அலங்காரம் (தாடங்கம்) சாற்றியவருக்கு நமஸ்காரம்

**ஸசிஷ்யகணயாத்ரா விதாயகாய நமோ நம:**

தன்னுடைய அநேக சிஷ்யகணங்களுடன் யாத்திரை செய்பவருக்கு நமஸ்காரம்

**ஸாதுஸங்கநுதாமேய சரண்ய நமோ நம:**

அனேக ஸாது ஜனங்களால் ஸ்துதிக்கப்பட்ட மஹா சரணம் உடையவருக்கு நமஸ்காரம்

**அபிந்நாத்மைக்ய விஜ்ஞாநப்ரபோதாய நமோ நம:**

தன்னைத் தவிர வேறு இல்லாத ஆத்மாவைப் பற்றிய ஞானத்தை எழுப்புபவருக்கு நமஸ்காரம்

**பிந்நாபிந்நமதைச்சாபி பூஜிதாய நமோ நம:** 80

விதவிதமான மதபிரிவுகளை அனுசரிக்கும் எல்லா ஜனங்களாலும் பூஜிக்கப்பட்டவருக்கு நமஸ்காரம்

**தத்தத்விபாக ஸத்போததாயகாய நமோ நம:**

அந்த அந்த பக்தர்களை பக்குவநிலைக்கு ஏற்ப நல்ல அறிவு தருபவருக்கு நமஸ்காரம்

**தத்தத்பாஷாப்ரகடித ஸ்வகீதாய நமோ நம:**

எல்லாவித பாஷைகளாலும் ப்ரகடனம் பண்ணப்பட்ட கீர்த்தியுடையவருக்கு நமஸ்காரம்

**தத்ர தத்ர க்ருதாநேகஸத்கார்யாய நமோ நம:**

எல்லா இடங்களிலும் அநேக ஸத்கார்யங்களை செய்தவருக்கு நமஸ்காரம்

**சித்ர சித்ர ப்ரபாவப்ரஸித்திகாய நமோ நம:**

விசித்ர விசித்ரமான ப்ரபாவங்களை காட்டுபவருக்கு நமஸ்காரம்

**லோகாநுக்ரஹக்ருத் கர்மநிஷ்டிதாய நமோ நம:**

லோகானுக்ரஹகாரியத்தில் நிஷ்டையுடன் ஈடுபடுபட்டவருக்கு நமஸ்காரம்

**லோகோத்த்ருதிமஹத்பூரிநியமாய நமோ நம:**

லோகங்களை உத்தாரணம் பண்ணுவதற்கு பலவிதமான பெரிய நியமங்கள் செய்கிறவருக்கு நமஸ்காரம்

**ஸர்வவேதாந்தஸித்தாந்த ஸம்மதாய நமோ நம:**

எல்லா வேதாந்தங்களையும் எல்லா ஸித்தாந்தங்களையும் ஒத்துக்கொள்பவருக்கு நமஸ்காரம்

**கர்மப்ரஹ்மாத்மகரண மர்மஜ்ஞாய நமோ நம:**

தன் கர்மாவை ப்ரம்மார்பணம் பண்ணுவதின் ஸூக்ஷ்மத்தை தெரிந்தவருக்கு நமஸ்காரம்

**வர்ணாச்ரமஸதாசாரரக்ஷகாய நமோ நம:**

வர்ணாஶ்ரமத்தின் நல்ல நடத்தையை ரக்ஷிப்பவருக்கு நமஸ்காரம்

**தர்மார்த்தகாமமோக்ஷ ப்ரதாயகாய நமோ நம:** 90

தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் ஆகிய நான்கு புருஷார்த்தங்களை கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**பதவாக்யப்ரமாணாதி பாரீணாய நமோ நம:**

பதம் வாக்யம் ப்ரமாணம் (இலக்கணம், நியாயம், மீமாம்ஸா) முதலியவைகளில் கரை கடந்தவருக்கு நமஸ்காரம்

**பாதமூலநதாநேகபண்டிதாய நமோ நம:**

அநேக பண்டிதர்களால் நமஸ்கரிக்கப்பட்ட பாதங்களுடையவருக்கு நமஸ்காரம்

**வேதசாஸ்த்ரார்த்தஸத்கோஷ்டீ விலாஸாய நமோ நம:**

வேதம் சாஸ்திரம் இவைகளுடைய பொருளைப் பற்றிய ஆராயும் ஸத்கோஷ்டியில் சிறந்தவராக விளங்குபவருக்கு நமஸ்காரம்

**வேதசாஸ்த்ரபுராணாதிவிசாராய நமோ நம:**

வேதம் சாஸ்திரம் புராணம் முதலியவைகளை ஆராய்பவருக்கு நமஸ்காரம்

**வேதவேதாங்க தத்வ ப்ரபோதகாய நமோ நம:**

வேதத்தின் தத்துவத்தையும் வேதாங்கத்தின் தத்துவத்தையும் அறியவைப்பவருக்கு நமஸ்காரம்

**வேதமார்க ப்ரமாண ப்ரக்யாபகாய நமோ நம:**

வேத மார்கத்தை ப்ரமாணமாக நம்புவதற்கு உண்டான தகுதியை வெளிப்படுத்துபவருக்கு நமஸ்காரம்

**நிர்ணித்ர தேஜோவிஜித நித்ராட்ட்யாய நமோ நம:**

இடை-இல்லாத பேரானந்த்தால் வெல்லப்பட்ட நித்திரைஸுகம் உடையவருக்கு நமஸ்காரம்

**நிரந்தர மஹாநந்த ஸம்பூர்ணாய நமோ நம:**

நிரந்தர பரமானந்தம் படைத்த ஆழ்ந்த மனமுள்ளவருக்கு நமஸ்காரம்

**ஸ்வபாவமதுரோதார காம்பீர்யாய நமோ நம:**

**ஸ்வபாவமாகவே இனிமையானதும் கம்பீரமானதும் ஆழமானதுமான ஸமுத்ரம் போன்றவருக்கு நமஸ்காரம்**

**ஸஹஜாநந்தஸம்பூர்ணஸாகராய நமோ நம:** 100

தானாக ஏற்படும் ஆனந்தத்தால் நிரம்பிய ஸமுத்ரம் போல் இருப்பவருக்கு நமஸ்காரம்

**நாதபிந்துகலாதீத வைபவாய நமோ நம:**

நாதம் பிந்து கலை இவைகளுக்கு அப்பாற்பட்ட வைபவமுடையவருக்கு நமஸ்காரம்

**வாதபேதவிஹீநாத்மபோதகாய நமோ நம:**

வாத பேதங்கள் இல்லாத ஆத்மாவின் ஞானத்தை அறியவைப்பவருக்கு நமஸ்காரம்

**த்வாதசாந்தமஹாபீடநிஷண்ணாய நமோ நம:**

குண்டலினியின் படங்களுக்கு மேல பன்னிரண்டு மஹா பீடத்தின் உச்சியில் நன்கு அமர்ந்திருப்பவருக்கு நமஸ்காரம்

**தேசகாலாபரிச்சிந்ந த்ருக்ரூபாய நமோ நம:**

தேசத்தாலும் காலத்தாலும் மாறுபடாத காட்சி கொடுப்பவருக்கு நமஸ்காரம்

**நிர்மாந சாந்திமஹித நிச்சலாய நமோ நம:**

அளவில்லாத சாந்தியின் பெருமையின் காரணத்தால் சலனமற்றவருக்கு நமஸ்காரம்

**நிர்லக்ஷ்ய லக்ஷ்ய ஸம்லக்ஷ்ய நிர்லேபாய நமோ நம:**

ஊஹிக்க முடியாதநிலை, ஊஹிக்ககூடியநிலை, நன்கு ஊஹிக்க கூடியநிலை முதலியவைகளில் எதிலும் ஒட்டாதவருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீ ஷோடசாந்த கமலஸுஸ்த்திதாய நமோ நம:**

குண்டலினியின் கமலபீடங்களுக்கு மேல் பதினாருவது கமலபீடத்தின் உச்சியில் நன்கு அமர்ந்திருப்பவருக்கு நமஸ்காரம்

**ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸ்ரீ ஸரஸ்வத்யை நமோ நம:** **108**

ஸ்ரீசந்த்ரசேகரேந்த்ரஸ்ரீ ஸரஸ்வதிக்கு நமஸ்கார்ரம்

